# பாகம் -1

## ருத்ராட்சம் பற்றி சில அறிய தகவல்கள்

ருத்ராட்சம் என்றதும் அனைவருக்கும், சிவனும், சிவனடியார்களும் தான் நினைவுக்கு வருவர். ருத்ராட்சக் கொட்டையும், விபூதிப் பட்டையும் சிவனடியார்களின் சின்னங்கள்; ஆனால், அதன் அருமை, பெருமை களை அறிந்தவர்கள் சிலரே! சிவனுறையும் கைலாசம் எனும் இமய மலைப் பகுதிகளில் மட்டுமே இது விளைகிறது. ஒருவர் ஏழு ஜென்மங்கள் தொடர்ந்து புண்ணியம் செய்து இருந்தால் தான் அவர்களுக்கு ருத்ராட்சமே கிடைக்கும். ருத்ராட்சம் அணிவதற்கு பயப்பட வேண்டாம் யார் வேண்டும் என்றாலும் ஜாதி மதம் பேதம் இல்லாமல் அணிந்து கொள்ளலாம்.



ருத்ராட்சத்தின் மகிமையை இன்று பலரும் உணர்ந்துள்ளனர். பல யுகங்களாக ஆன்மிக அன்பர்களுக்கு பல்வேறு வகையில் ருத்ராட்சம் பல்வேறு பலனை கொடுத்துக் கொண்டிருந்தாலும், அது தோன்றிய வரலாறு என்பது மிகவும் சுவாரஸ்யமானது.

## ருத்ராட்ஷம் எவ்வாறு தோன்றியது?

முன்னொரு காலத்தில் நாரத முனிவருக்கு ஒரு பழம் கிடைத்தது. அப்பழத்தை அவர் மகாவிஷ்ணுவிடம் காண்பித்து, இது என்ன பழம் இப்பழத்தை இது வரை நான் பார்த்ததில்லையே என்று கேட்டார். அதற்கு மகாவிஷ்ணு நாரதா பூர்வ காலத்தில் திரிபுராசுரன் என்ற அரக்கன் இருந்தான். அவன் சர்வ வல்லமை படைத்தவனாகவும்,பிரம்மனிடம் வரம் பெற்றவனாகவும் இருந்தான்.அந்த கர்வத்தினால் சர்வ தேவர்களையும் துன்புறுத்தினான். அப்பொழுது தேவர்கள் அனைவரும் என்னிடம் வந்து அந்த அரக்கனை அழிக்குமாறு வேண்டினார்கள். நான் அனைவரையும் அழைத்துக் கொண்டு சிவபெருமானிடம் முறையிட்டோம்.

அப்பொழுது சிவபெருமான் தேவர்கள் அனைவரின் சக்தியையும் ஒரேசக்தியாக மாற்றி ஒரு வல்லமை படைத்த ஆயுதம் ஒன்றை உண்டாக்கினார். அந்த ஆயுதத்தின் பெயர் அகோரம் ஆகும். தேவர்களை காக்க திரிபுராசுரனை அழிக்க கண்களை மூடாமல் பல ஆயிரம் வருடம் அகோர அஸ்தர நிர்மாணத்திற்காக சிவபெருமான் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அப்போது மூன்று கண்களையும் அவர் மூடும்போது, பல ஆண்டுகள் மூடாமல் இருந்து மூடுவதால் மூன்று கண்களில் இருந்தும் கண்ணீர் சிந்தியது. அந்த கண்ணீர் பூமியில் விழுந்து ருத்ராஷமரமாக உண்டானது. அந்த ருத்ராஷ மரத்தில் இருந்து விழுந்த பழம்தான் இது, என்று மகாவிஷ்ணு நாரதரிடம் கூறினார். அதை அணிபவரை அவர் கண்போலக் காப்பாற்றுவார். எனவே அனைவரும் கண்டிப்பாக ஐந்து முகம் ஒரு ருத்ராட்ஷமாவது எப்போதும் கண்டிப்பாக அணிந்தீருக்க வேண்டும்

## ஆப்படியானால் யார் வேண்டுமானாலும் ருத்ராட்ஷம் அணியலாமா?

ஆமாம்! ருத்ராட்ஷத்தை யார் வேண்டுமானாலும் அணியலாம். எல்லா நேரத்திலும் அணிந்திருக்கலாம். நீர் பருகும் போதும், உணவு உண்ணும்போதும், தூங்கும்போதும் எல்லாக்காலத்திலும் ருத்ராட்ஷம் அணிந்திருக்க வேண்டும் என்று சிவபெருமானே கூறியுள்ளதாக சிவபுராணம் தெரிவிக்கிறது.

சிறுவர், சிறுமியர் ருத்ராட்ஷம் அணிவதால் அவர்களின் படிப்புத் திறமை பளிச்சிடும். ருத்ராட்ஷத்தை பெண்கள் அணிந்தால் தீர்க்க சுமங்களியாக மஞ்சள் குங்குமத்தோடு வாழ்வார்கள். இதனால் அவர்களுடைய கணவருக்கும் தொழிலில் வெற்றியும் இல்லத்தில் லட்சுமி கடாசமும் நிறைந்திருக்கும். ஆகையால் கண்டிப்பாக ருத்ராட்ஷம் அணியவேண்டும்..

## சுத்தபத்தமாக இருப்பவர்கள் தான் ருத்ராட்ஷம் அணிய வேண்டும் என்று சொல்கிறார்களே?

குளித்தவர்கள்தான் சோப்பு உபயோகப்படுத்த வேண்டும் என்று யாராவது சொல்வார்களா? ஆரோக்கியம் உள்ளவனுக்குத்தான் மருந்து: நோயில் தவிப்பவனுக்கு கிடையாது, என்று எவரேனும் சொன்னால் ஏற்றுக்கொள்வோமா? அது போலத்தான் சுத்தமாக இருப்பவர்கள்தான் ருத்ராட்ஷம் போட்டுக்கொள்ள வேண்டும் என்று சொல்வதும்.

ருத்ராட்ஷம் அணிந்தால்தான் மனமும், உடலும் தூய்மை அடையும். எனவே உங்களை நீங்களே தாழ்த்திக்கொள்ளாமல் நம்பிக்கையோடு ருத்ராட்ஷம் அணிந்து கொள்ளுங்கள். எப்படி மருந்துக்குப் பத்தியம் அவசியமோ அதுபோல ருத்ராட்ஷம் அணிபவர்களும் மது அருந்துதல், புகை பிடித்தல், புலால் உண்ணுதல் போன்றவற்றை படிப்படியாக விட்டுவிட முயற்சிக்க வேண்டும். (முக்கியமாக மாடு, பன்றி மாமிசம் எப்போதும் சாப்பிடக்கூடாது).

## ருத்ராட்ஷத்தில் முகமா? அப்படியென்றால் என்ன? யார், யார் எத்தனை முகம் கொண்ட ருத்ராட்ஷம் அணியலாம்?

ருத்ராட்ஷத்தின் குறுக்கே அழுத்தமான கோடுகளைக் காணலாம், இதற்குத்தான் முகம் என்று பெயர். ஐந்து கோடுகள் இருந்தால் ஐந்து முகம். ஆறு கோடுகள் இருந்தால் ஆறு முகம் என்று இப்படியே கணக்கிட வேண்டியதுதான். எத்தனை முகம் என்பதைக் கண்டுபிடிக்க எவ்வித முன் அனுபவமும் தேவையில்லை. கண்ணால் சாதாரணமாகப் பார்த்தாலேயே தெரியும்.




அதுமட்டுமல்ல, எல்லா இடங்களிலும் எளிதில், மிகமிக சகாயமான விலையில் கிடைக்கும் ஐந்து முக ருத்ராட்ஷம் அணிவதே போதுமானது. பகவானின் திருமுகம் ஐந்து. நமச்சிவாய ஐந்தெழுத்து. பஞ்சபூதங்கள் ஐந்து (நிலம், நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம்).நமது கை கால் விரல்கள் ஐந்து. புலன்கள் ஐந்து. ஆகையால் மிக அதிகமாக ஐந்து முக ருத்ராட்ஷத்தையே படைக்கின்றார். ஆகையால் ஐந்து முக ருத்ராட்ஷங்கள் அணிவதே மிகச் சிறப்பு. இதை ஆண், பெண் மற்றும் குழந்தைகள் என சகலமானவர்களும் அணியலாம். ஐந்து முக ருத்ராட்ஷத்திலேயே மற்ற எல்லா முக ருத்ராட்ஷங்களினால் கிடைக்கின்ற பலன்களும் அடங்கிவிடும்.

## பெண்கள் ருத்ராட்ஷம் அணியக்கூடாது என சிலர் சொல்கிறார்களே?




பெண்களின் பெருந்தெய்வமாக விளங்குபவள் ஆதிபராசக்தி அவள் ருத்ராட்ஷம் அணிந்திருப்பதை, கொந்தளகம் சடை பிடித்து விரித்து பொன்தோள் குழை கழுத்தில் கண்டிகையின் குப்பை பூட்டி என்று விவரிக்கிறது (அருணாசலபுராணம் (பாடல் எண் 330) பழி, பாவம் முதலியவற்றை முழுவதுமாகத் தீர்த்துக் கட்டுகிற திருநீறையும், ருத்ராட்ஷத்தையும் தனது திருமேனி முழுவதிலும் அகிலாண்டேஸ்வரி அணிந்து கொண்டாளாம். பராசத்திக்கு ஏது பழியும், பாவமும்? நமக்கு வழி காட்டுவதற்காகத்தானே அம்பிகையே ருத்ராட்ஷம் அணிந்து கொள்கிறாள்!. எனவே பெண்கள் தாராளமாக அம்பிகை காட்டும் வழியைப் பின்பற்றி ருத்ராட்ஷம் அணிய வேண்டும். மேலும், சிவ மஹாபுராணத்திலும் பெண்கள் கட்டாயம் ருத்ராட்ஷம் அணிய வேண்டும் என்று சிவபெருமானே வலியுறுத்தியுள்ளார்.

## எல்லா நாட்களிலும் பெண்கள் ருத்ராட்ஷம் அணியலாமா?

பெண்கள், தங்களுடைய தாலிக் கொடியில் அவரவர் மரபையொட்டி சைவ, வைணவச் சின்னங்களைக் கோர்த்துதான் அணிந்திருக்கின்றனர். அதை எல்லா நாட்களிலும் தானே அணிகிறார்கள்? சில பெண்கள், யந்திரங்கள் வரையப்பட்ட தாயத்து போன்றவற்றையும் எப்போதும் அணிந்திருப்பதுண்டே? இவற்றைப் போல் ருத்ராட்ஷத்தையும் எல்லா நாட்களிலும் கழற்றாமல் அணிய வேண்டும். ருத்ராட்ஷம் வாழும் இந்த உடம்பிற்காக அல்ல. உயிரின் ஆத்மாவிற்காகவே சிவபெருமானால் அருளப்பட்டது.

## ருத்ராட்ஷம் கண்டிப்பாக அணிய வேண்டுமா?

இன்று பிறந்த குழந்தை முதல் பெரியவர்கள் வரை ஆண் - பெண் இருபாலரும் கண்டிப்பாக ருத்ராட்ஷம் அணிய வேண்டும். ஏனெனில் நம்மைப் படைத்ததே பாவங்களைப் போக்கி சிவபெருமானின் திருவடியை அடைவதற்காகவே நம் வாழ்க்கையில் வரும் கஷ்டம், வேதனை, துன்பம், வலி இவைகளிலிருந்து விடுபடுவதற்காகவே ருத்ராட்ஷம் அணிய வேண்டும். ருத்ராட்ஷம் அணிந்தால் மறுவிறவி இல்லை மஹா பேரானந்தமே. ருத்ராட்ஷம் அணிவதை சிலபேர் நீ அணியக்கூடாது சுத்தமானவர்கள் தான் அணிய வேண்டும் என்று சொல்வார்கள், அதைப் பொருட்படுத்தக் கூடாது. இறைவனுக்கு ஒருவர் மீது கருணை இருந்தால் மட்டுமே ருத்ராட்ஷம் கழுத்தில் அணியும் பாக்கியம் கிடைக்கும். ருத்ராட்ஷம் முழுக்க முழுக்க சிவபெருமானுடையது. சிவபெருமான் கண்களை விழித்து 1000 வருடங்கள் கடும் தவம் இருந்து அவர் கண்களில் இருந்து தோன்றியதே ருத்ராட்ஷம்.



ருத்ராட்ஷத்தை அணிந்து கொண்டவர்கள் சிவ குடும்பத்தில் ஒருவராவார். சிவபெருமான் தன் குடும்பத்தில் இருப்பவர்களுக்கு கஷ்டத்தையும், துன்பத்தையும் கொடுப்பாரா?. அதனால் யார் என்ன சொன்னாலும் கண்டிப்பாக ருத்ராட்ஷத்தை அணியவேண்டும். ருத்ராட்ஷதை அணிந்த பின் எந்த சூழ்நிலையிலுமே கழற்றவே கூடாது. நீங்கள் இப்பொழுது எப்படி வாழ்க்கை

நடத்திக்கொண்டிருக்கின்றீர்களோ அதேபோல் வாழ்ந்தால் போதும் இதில் எவ்வித மாற்றத்தையும் செய்யத் தேவையில்லை. நெற்றியில் திருநீறு அணிந்து ஓம் நமசிவாய சொல்லி வந்தாலே போதுமானது.

## நீத்தார் கடன் (திதி), பெண்கள் தீட்டு, கணவன் - மனைவி இல்லறதாம்பத்யம் நேரங்களில் ருத்ராட்ஷம் அணியலாமா?

முக்கியமாக இம்மூன்று விஷயங்களுமே இயற்கையானதே. இதில் எந்த நிகழ்ச்சியும் செயற்கையானதே கிடையாது. நீத்தார் கடன் போன்றவற்றை செய்யும் போது அதை செய்விப்பவரும், செய்பவரும் ருத்ராட்ஷம் அணிந்திருப்பது அவசியம். இதனால் பித்ருக்களின் ஆன்மாக்கள் மகிழும் என்று சிவபெருமானே உபதேசித்திருக்கிறார். இனியும் ஏன் சந்தேகம் ஆகையால் இம்மூன்று நிகழ்ச்சிகளின் போது கண்டிப்பாக ருத்ராட்ஷம் அணியலாம். அதனால் பாவமோ, தோஷமோ கிடையாது.

## சரி ருத்ராட்ஷத்தை அணிந்து கொண்டேன், இதன் பலன்கள் தான் என்ன?




நிராடும் போது ருத்ராட்ஷம் அணிந்திருந்தால் கங்கையில் குளித்த புண்ணியம் கிடைக்கும் என்கின்ற புராணங்கள், கங்கையில் மூழ்கினால் பாவம் போகும் என்பது நம் அனைவருக்கும் தெரியும். பாவங்களினால் தான் நமக்குக் கஷ்டம் உண்டாகிறது. ருத்ராட்ஷம் அணிவதால் கொடிய பாவங்கள் தீரும். இதனால் நம் வாழ்வில் ஏற்படும் துன்பங்களும் படிப்படியாகக் குறைந்து விடும்.

மேலும் ருத்ராட்ஷம் அணிபவருக்கு லஷ்மி கடாஷ்சமும், செய்யும் தொழிலில் மேன்மையும், சகலவிதமான ஐஸ்வர்யங்களும் ஏற்பட்டு பகவானின் பேரின்பமும், ஆனந்தமும் கிடைக்கும் என்று சிவ மஹா புராணம் அறுதியிட்டுக் கூறுவதையும் கருத்தில் கொள்க.

இது மட்டுமல்ல ருத்ராட்ஷம் அணிவதால் இதய நோய், ரத்த அழுத்தம், சர்க்கரை நோய், புற்றுநோய் போன்றவற்றின் தீவிரம் குறைவதாக வெளிநாட்டவர்களின் ஆய்வுகள் கூறுகின்றன. எனவே தூங்கும்போதும் கூட ருத்ராட்ஷத்தைக் கழற்றி வைக்க வேண்டிய அவசியம் கிடையாது. திருமணம் ஆகாதவர்கள், குழந்தை பாக்கியம் இல்லாதவர்கள், வேலை வாய்ப்பு இல்லாதவர்களும் கண்டிப்பாக ருத்ராட்ஷம் அணிந்து தினந்தோறும் 108 முறை எழுத்தாலோ மனதலோ பஞ்சாட்சரத்தை சொல்லிவந்தால் 18 மாதத்தில் மேற்கூறிய பிரார்த்தனைகள் நிறைவேறும்.

# ருத்ராட்ஷம் அணிவதால் கடவுளின் கருணை கிட்டுமா?

சர்வ நிச்சயமாக அவன் அருளாலே அவன் தால் வணங்கி அவர் கருணை செய்தால்தான் அவருடைய நாமத்தைக்கூட நாம் சொல்ல முடியும். அப்படியிருக்க அவர் ருத்ராட்ஷத்தையே நமக்கு அளித்துள்ளாரே அதனால் திருநீறு தரித்தல், ருத்ராட்ஷம் அணிதல், பஞ்சாட்சர மந்திரமான "ஓம் நமசிவாய" உச்சரித்தல், இம்மூன்றும் ஒரு சேரச் செய்து வந்தால் முக்தி எனும் மஹா பேரானந்தத்தை அடைவீர். இம்மூன்றும் இந்து தர்மங்கள், தர்மத்தை விடாதவர்களை இறைவன் கைவிடமாட்டார். மேலும் நவகிரஹங்கள் நன்மையே செய்யும், (ஏழரைச் சனி, அஷ்டமச்சனி, ராகு-கேது) தோஷத்தின் தாக்கங்கள் குறையும். ருத்ராட்ஷம் அணிந்திருக்கும் வேலையில் உயிர் பிரிந்தால் சிவபெருமான் திருவடியை அடைந்து நற்கதி எற்படும். பேய், பிசாசு, பில்லி, சூனியம், மந்திரம், தந்திரம், இவை அனைத்தும் ருத்ராட்ஷம் அணிந்திருப்பவர்களை ஒன்றுமே செய்யமுடியாது. ஆகையால் ஒவ்வொருவரும் கண்டிப்பாக ருத்ராட்ஷம் அணிய வேண்டும். ஒருவர் ஏழுஜென்மங்கள் தொடர்ந்து புன்னியம் செய்திருந்தால் மட்டுமே அவர்களுக்கு ருத்ராட்ஷம் அணியும் மஹா பாக்கியம் கிடைக்கும்,.

நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

# இத்தனை மேன்மைகள் இருந்தும் சிலர் திருநீறு, ருத்ராட்ஷம் அணியத் தயங்குகிறார்களே?

உலகில் மற்ற பகுதிகளில் உள்ளவர்கள் அவர்களின் மத சின்னங்களை அணிய வெட்கப்படுவதில்லை. நாம் நமது மதச் சின்னங்களாகிய விபூதி, ருத்ராட்ஷம் மற்றும் நமசிவாய என்ற ஜபம் ஆகியனவற்றை ஏன் விடவேண்டும்? இதற்காக யாராவது நம்மைக் கேலி பேசினாலும் பொருட்படுத்தக்கூடாது. அப்படிப் பேசுகிறவர்களா நமக்குச் சோறு போடுகிறார்கள்? அவர்களா நம்மைக் காப்பாற்றுகிறார்கள்? ஆனால் மதச் சின்னங்களை அணிந்து நமசிவாய என்று எல்லாக் காலத்திலும் சொல்லிக் கொண்டிருப்பவர்கள சிவபெருமான் நிச்சயம் காப்பாற்றுவார். அவரவர், தங்கள் வாழ்க்கையிலேயே இதை அனுபவப் பூர்வமாக உணரலாம். ருத்ராட்ஷம் அணிபவர்கள் கண்டிப்பாக எந்த சூழ்நிலையிலும், ருத்ராட்ஷிதைக் கழற்றவே கூடாது. யார் என்ன சொன்னாலும் அதைப் பொருட்படுத்த வேண்டாம். சிவபெருமானின் அனுக்கிரஹமும், ஆசீர்வாதமும் இருந்தால் மட்டுமே ஒருவருக்கு ருத்ராட்ஷம் கிடைக்கும். இத்தனை மேன்மைகள் இருந்தும் இதனைப் படித்துப் பார்த்துத் தெரிந்த பின்பும் மனிதராகப்

பிறந்தவர்கள் ருத்ராட்ஷம் அணியவில்லை என்றால் அவர்கள் இப்பிறப்பிற்கே பிரயோஜணமில்லாமல் போய்விடுவார்கள் ஆகையால் கண்டிப்பாக ஒவ்வொருவரும் ருத்ராட்ஷம் அணிய வேண்டும்

"திருச்சிற்றம்பலம்"

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.




## ஆன்மீகம்